ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

பாகவத அந்தர்க்கதமான

# ஸ்ரீ தத்தாத்திரேயயது சம்வாதச்

செய்யுளும்,

# ஸ்ரீ ஆத்துமாநந்தீயமென்னும்




மதுரை, ஸ்ரீ மீனாம்பிகை பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றன.

1937.



உ

ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

பாகவத அந்தர்க்கதமான

# ஸ்ரீ தத்தாத்திரேயயது சம்வாதச் செய்யுளும்,

# ஸ்ரீ ஆத்துமாநந்தீய மென்னும் உரையும்.

---

உரைமங்கலம்

வாழ்த்துவடிவம்.

தும்பியானனத் தெம்பிரானடி
நம்பினேற்குவீ டும்பினல்குமே

இதன் பொழிப்புரை:— யானை முகத்தினையுடைய எனது விநாயகப் பெருமானது திருவடியானது தன்னையே முற்றும் புகலிடமாக

நம்பி வழிபடுகின்ற அடியேனுக்கு மறுமைக் கண் முத்தியின்பத்தையும் கொடுக்கும். (எ-று)

எச்சவும்மையால் இம்மைக்கண் போக வின்பமும் கொள்ளப்படும். னகரமெய் எதுகை நோக்கி மகரமெய்யாயிற்று.

வணக்க வடிவம்

அறுசீர்க் கழிநெடில்.

அயன்முதன் மூவருருவணிக் கானவெனா
வெனையொன்றென் றருள நூலாற்
பயனுறவுட் பதிப்பிக்கப் பற்றறுவே
டங்கொடுத்த பரோக்ஷம் பண்ணாத்
தயவுறுசி தம்பாசி வப்பிரகா
சமுத்தாநந் தப்பேர் தாங்கு
முயர்பொருளாஞ் சச்சிதா நந்தகுரு
வடிசிரத்து முளத்துங் கொள்வாம்.

(பொ-ரை) பிரஹ்மாதி மும்மூர்த்திகளும் சச்சிதாநந்த அகண்டைகரச சொரூபராயினும்

உலகத்தைச் சிருட்டித்துக்காத்துச் சம்மரிக்கும் பொருட்டு மாயா உபாதிவசத்தால் பிரஹ்மா விஷ்ணு உருத்திரன் என மூன்று வடிவங் கொண்டாற்போல எனது குருமூர்த்திகளாகிய திரிமூர்த்திகளும் சைதன்னிய சொரூபத்தாலே கராயினும் என்னை அத்துவைதியென எனக் குபதேசிக்கவும் அவ்வுபதேசம் பயன்படுமாறு சாஸ்திரார்த்தங்களைப் போதித்துச் சந்தேக நிவிர்த்திசெய்வித்தல் வாயிலாக நிலைபெறுத் தவும் அன்னியமாகிய அஞ்ஞானதிகளைத் தையும் துரியாச்சிரம முதவித் துறப்பித்து அபரோக்ஷ ஞானவாயிலாக எனது நிசசொரூபா நந்தத்தை யெனக்குக் கொடுக்கவுங் கருதி அருளாற்றிருமேனிகொண்டு ஸ்ரீ சிதம்பரதேசி கர் ஸ்ரீ சிவப்பிரகாசதேசிகர் ஸ்ரீ முத்தாநந்த தேசிகர் என மூவடிவரா யெழுந்தருளிய அம்மூப் பெயர்களின் சிறந்த பொருளாயிருந்து விளங்கி இன்பந்தருகின்ற ஸ்ரீ குருவின்றிருவடிகளை

யெனது சிரத்தினும் மனத்தினும் பொருந்து மாறு வணங்கிச் சிந்திப்பாம் யாம். (எ-று)

அவனிக்கு என்பது வேற்றுமை மயக்கம்.



## வஸ்து நிர்த்தேச வடிவம்.

### குறள் வெண்பா.

எல்லாமு மாக விருந்திலகு மின்பமே
நல்லா தரவிஷய நான்.

(பொ-ரை) சேதனமும் அசேதனமுமாகிய பிரபஞ்சப் பொருள்களனைத்தும் மாயையின் வலியால் உற்பத்தியாவதாகவும் நாசமடைவதாக வும், இருப்பதாகவும் விளங்குவதாகவும் இன்பந் தருவதாகவும் [அத்தியாசத்தாற்] காணப்படு தற்கு ஆசிரயமாய் அபாதிதமாகயிருந்து சொப் பிரகாசமாய் விளங்குகின்ற ஆநந்த சொரூபப் பிரஹ்மமே மிகுந்த பிரியத்திற்கு விஷயமாயும் நான் என்னுஞ் சத்தத்தின் இலக்கியார்த்தமாயு முள்ள பிரத்தியகான்மா. (எ-று)

கருத்து: —சச்சிதானந்த சொரூபப் பிரஹ்மமே பிரத்தியகான்மா என்பதாம்.

பாயிரம் முற்றிற்று.



## நூல்.

திதிலன் மகிழுந் தத்தாத்
 திரேயனென் றுலக மெல்லா
மோதவ தூத வேடத்
 தொருவனை யெதுமுன் கண்டு
நீதிசெய் யறம்பொன் காம
 நினைந்திலே சிறந்து மின்ப
மேதினு லடைகின் றாய்நீ
 யெனமுனி யிசைக்க லுற்றான்.

(பொ-ரை) யாதொரு துன்பமுமின்றி மகிழ்ச்சியுற்றிருக்கின்றவனும் உயர்ந்தோர் யாவராலும் புகழப்படுபவனும் அவதூத சந்நியாசியுமாகிய ஒப்புயர்வற்ற தத்தாத்திரேய முனி

வாளை எதுமகாராஜனானவன் நேரிற்றரிசித்து ஓ முனிவரிற் சிறந்தோனே நீ முறையாகச் சம்பாதிக்கத்தக்க தர்ம அர்த்த காம கர்மங்களைச் சிறிதும் மனத்தாலு நினையாதிருக்கின்றாய் இவ் வாறிருந்தும் இன்ப மூர்த்தியா யிருக்கின்றாய் இவ்வின்பத்தை யெக்காரணத்தால் அனுபவிக் கின்றாயென்று கேட்க அம்முனிவன் அதற்குத் தரங் கூறுகின்றான்.

தீதிலன் என்பது முற்றெச்சம். (க)

தரைபுனல் கனல்கால் வானந்
　　தபனன்வெண் டிங்கள் வாரி
வரையுறை யரவு மான்கான்
　　வருகரி பதங்க மீன
மூரலளி கணைசெய் கின்றோன்
　　மொழிதருங் குமரி தேனீ
யுரைதரு புறவு தாசி
　　யூன்கவ ரன்றி ஞகம்.

உறைந்தநூற் சிலம்பி மைந்த
னாதுவன் டெடுத்த கீடஞ்
சிறந்தன விவைநா லாறுஞ்
சிந்தையிற் குருவென் றுக்கி
மறந்தரு மிவைக டேதா
மற்றிவை நலனு மென்றிங்
கறிந்தன னின்ப முற்றே
னவ்வகை யரச கேண்மோ.

(போ-ரை) பூமியும் ஜலமும் அக்கினியும் காற்றும் ஆகாயமும் சூரியனும் சந்திரனும் சமுத்திரமும் மலைப்பாம்பும் மானும் யானையும் விட்டிற்பறவையும் மீனும் வண்டும் அம்புசெய் பவனும் குமரிப்பெண்ணும் தேனீயும் புறுவும் தாசியும் அன்றிற்பக்ஷியும் நாகப்பாம்பும் சிலம்பிப் பூச்சியும் பாலகனும் வண்டாலெடுத்து வைக்கப் பட்ட புழுவும் ஆகிய இருபத்துநாலு வஸ்துக் களையும் மனத்தின்கண் குருவாக நிச்சயித்து அவற்றுள் சிலவற்றின் குணங்களை இவை கேடு

பயப்பனவாமென்றறிந்து விலக்குதலாலும் சில வற்றின் குணங்களை இவை நன்மை பயப்பனவா மென்றறிந்து கொள்ளுதலாலும் இன்பமடை கின்றேன். அந்த வகையையுங் கேட்பாயாக. (ஏ-று) (2) (௩)

வேறு

அவதாரிகை.

தரையால் பொறுமையும் கைமாறு கருதாத வீகையும் பெற்றேனெனல்.

(க) பரிவின் வெட்டினுங் கல்லினும்
பயன்பொறுக் தளித்தும்
புரியு நல்லகைம் மாறெதிர்
பொருந்திடா தசலத்
தருவி நீரட விக்கனி
முதலிய வளித்து
மிருதி றத்தையு மெனக்கறி
வித்தது தரையே

(பொ-ரை) பூமியானது தரைவாசிகள் தன் னுடம்பின்கண் வருத்தமுறும்படி வெட்டினும் (கிணறு முதலியனவாகப் பள்ளமாக்கினும்)

உழுபடை முதலியவற்றாற் கிழிப்பினும் அத் துன்பங்களைப்பொறுத்து அவரவரிச்சித்த பயன்களை அவரவருக்குக் கொடுத்தலும் இப்பொறுமை மாத்திரமன்றி மலைவாசிகட்கு அம்மலைக்கண் அருவிவாயிலாக நீரையும் சோலைவாயிலாகக் கனி முதலியவற்றையும் கைம்மாறு கருதாது கொடுத்தலும் ஆகிய இவ்விருவகைக் குணங்களையும் யான் அநுட்டிக்கும்படி எனக்கு அறிவித்தது. (எ-று)

அதனால் அவ்விருவகைக் குணங்களையும் யான் உடையனாயிருக்கின்றேன். (எ-ம்) (௧)

(அ—கை) புனலால் சித்த சுத்தியும் அதனால் தனது சொரூப சாக்ஷாத்காரமும் ஆநந்தாநுபூதியும் பெற்றேன் எனல்.

(உ) நளிகொ ளும்முரு நினைக்கி னுங்
காணி னு நலஞ்சேர்ந்
தொளிகொ ளும்பெயர் வழுத்தி னு
மன்னவ ருளத்தை

யளிகொ ளும்புனி தம்பெற
வாக்கலு மருந்தண்
டெளிவு மப்புவி னிடத்தினின்
றறிந்தனன் றெரிக்கின்.

(பொ-ரை) குளிர்ச்சி பொருந்திய தனது பெயரைத் துதிக்கினும் தனது சொரூபத்தைச் சிந்திக்கினும் தரிசிக்கினும் அத்துதித்தலாதிகளைச் செய்பவரது உள்ளத்தைச் சுத்தியாக்குதலும் அச்சுத்திவாயிலாகச் சாந்தமாக்குதலும் தெளிவாக்குதலும் ஜலத்தினின்று யானறிந்தேன். (எ-று)

அறிந்ததைச் சொல்லின்—யானும் எனது நிசசொரூபத்தின் (சிரவணமனனவடிவ) துதியினுலும் நிதித்தியாசனமாகிய சிந்தனத்தினுலும் சித்தசுத்தியைப்பெற்று அச்சுத்த சித்தவிருத்தியால் அதனைச் சாக்ஷாத்கரி (தரிசி) த்து அத்தரிசனத்தாற் பந்தமாகிய கலக்கம் நீங்க அத்துவைத பரிபூரணுநந்தானுபூதி பெற்றேன். (எ-ம்)

ஒளிகொளும் பெயர் வழுத்தினும் உரு நினைக்கினும் காணினும் அன்னவருளத்தைப் புனிதம் பெறவாக்கலும் அருந்தண்மையாக்கலும் தெளிவாக்கலும் அப்புவினிடத்தினின்ற றிந்தனன் என உவமையிலும், தெரிக்கின் ஒளிகொளும் உருவழுத்தினும் நினைக்கினும் நலஞ்சேர்ந்து காணினும் புனிதம்பெற அளிகொளுந் தெளிவு (பெற்றேன் யான்) எனப் பொருளிலுங் கூட்டுக. பெற்றேன் யான் என்பது சொல்லெச்சம். வழுத்தினும் என்பதாதிகளை உவமையிற் செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சங்களாகவும், பொருளில் எதுப்பொருளிலும், எண்ணுப் பொருளிலும் வந்த இன்னுருபையும் உம்மை யிடைச்சொல்லையுங் கொண்ட முதனிலைத் தொழிற் பெயர்களாகவுங் கொள்க. (ரு)

(அ—கை) கனலால் எவ்வுணவையும் விலக்காது புசித்தலும் சுவ தருமத்திருத்தலும் சங்கமின்றி யிருத்தலும் சொப்பிரகாசப் பேறும் பெற்றே னெனல்.

(ரு) இருந்தி ராகமோ டியம்பரும்
வெறுப்பற வெறிந்து
பொருந்து கின்றன வியாவையும்
பொசிப்பது மெவரும்
விரைந்து வந்தணு காவகை
வீற்றிருப் பதுவுந்
திருந்து கின்றநற் காந்தியும்
பெற்றனன் றீயின்.

(போ—ரை) தன்னைச்சேர்ந்த எல்லா வஸ்துக்களையும் விலக்காது தகித்தலையும் அவற்றைத் தகிக்குங்காலத்தும் சிலவற்றில் விருப்பமும் சிலவற்றில் வெறுப்பும் கொள்ளாது உதாசீனமாயெறித்தலாகிய தனது தருமத்திலிருத்தலையும் அவ்வாறிருத்தலால் யாவரேயாயினும் திடமொன்று தன்னிடத்து வந்து நெருங்காவண்ணம் தனித்திருத்தலையும் எவ்வகையேதுக்களாலும் நீங்காத பிரகாச சொரூபத்தையும் அக்கினியினிடத்துக்கண்டு அவற்றையும் யான் பெற்றனன். (எ-று)

எவ்வாறெனில், எத்தன்மைய உணவுகிட்டினும் விலக்காது புசிக்கின்றேன் புசிக்குங் காலத்தும் அவற்றில் விருப்பு வெறுப்புக்கொள்ளாமல் எனது தருமமாகிய மௌன நிலையிலிருக்கின்றேன், அதனால் சங்கமின்றி ஏகாந்தவாசியாயும் நித்தியமாகிய அத்துவைத பூரணாநந்த சொப்பிரகாச சொரூபியாயும் இருக்கின்றேன். (எ-ம்)

பொருந்துகின்றன வியாவையும் பொசிப்பதும் இராகமோடு இயம்பரும் வெறுப்பற வெறிந்திருந்து எவரும் விரைந்து வந்தணுகாவகை வீற்றிருப்பதுவும் திருந்துகின்ற நற்காந்தியும் தீயிற் பெற்றனன் என்றநுவயிக்க. (கூ)

(அ—கை) காலால், யோகிகளுக்கு இராகத்துவேஷமிருந்தாலும் கேடில்லை யென்றறிந்தேன் எனல்.

(ச) வளர்ந்த காதல்வெவ் வெறுப்படைந்தாரென வரினுந்
தெளிந்த யோகிய ருயிர்க்கவை யில்லெனத் தெளிந்தேன்

விளைந்த வாசமும் விளம்புதுர்க்
கந்தமு மேவி
யளைந்து வந்துமக் குணம்பெறு
தனிலமென் றறிந்தே.

(பொ—ரை) மேற்கவியிற் கூறியவாறின்றி பிராரத்த வசத்தால் விஷயங்களில் விருப்படைந் தாரெனவும் வெறுப்படைந்தாரெனவும் அன் னியர் கூறுமாறு உலகத்திற் சஞ்சரித்தாரா யினும் அஞ்ஞானத்தாலாகிய கலக்கம் கலங்கனீர் கதகரேணுவாற் றெளிந்தாற்போலத் தெளிந்த மனமுடைய யோகியர்களுக்கு அவ்விராகத் துவேஷங்களாலும் கேடில்லை யென்பதை யறிந் தேன். எக்காரணத்தாலெனில் வாயுவானது சுகந்த வஸ்துக்களையும் துர்க்கந்த வஸ்துக் களையும் வாரிக்கொண்டு செல்லுதலால் அவற் றோடு கலந்ததுபோற் காணப்படினும் கலவா மையைக் காணுதலால். (எ-று)

வஸ்துக்களென்றது குணியாகிய வணுக்களை. பெறுதெ்ன்னும் வினைமுற்றையும் அறிந்தென்னும் வினையெச்சத்தையும் பொருளேக்கி வினையாலணையும் பெயராகவும் தொழிற் பெயராகவும் ஆக்கினும். (எ)

(அ—கை) வானத்தாற் பிரஹ்மத்தை யேகமென்றறிந்தேன் எனல்.

(நி) கண்ண கன்றிடு மிடத்துள்வான்
கடத்துள்வா னெனவா
னெண்ண நின்றன போகவொன்
றுயினையந் ததுற்
பண்ணு கின்றதன் மாயையிற்
பற்பல படைப்பாய்
நண்ணு கின்றதும் பிரஹ்மமொன்
றென்றுநன் கறிந்தேன்.

(பொ-ரை) பரிச்சின்னமாகிய கடமிருக்குமிடத்துள்ள வாகாயம் கடாகாயமெனவும் கடத்திற்கு வெளியே வியாபகமாகிய விடத்துள்ள வாகாயம் வியாபக வாகாயமெனவும் ஆகாயம்

பலவாகக் காணப்படுகின்றது அவ்வாறு காணப் படினும் அப்பேதத்துக்குக் காரணங்களாயுள்ள உபாதிகளின் விடுபாட்டால் ஏகமாகக் காணப் படுதல்போல.

பிரஹ்ம சைதன்னியமானது தனது மாயை யாலாக்கப்பட்ட அந்தக்கரண உபாதிகளின் வசத்தால் நாநாஜீவர்களாகக் காணப்படுகின்றது அவ்வாறு காணப்படினும் அப்பேதத்துக்குக் காரணங்களாகிய அந்தக்கரண வடிவ உபாதி களின் விடுபாட்டால் அது ஏகமாகவிருக்கிற தென்பதை நன்றாகவறிந்தேன். (எ-று) மாயை ஆகு பெயர்.

பிரஹ்ம சைதன்னியம் ஏகமாயினும் திருஷ் டாந்தத்தின். உபாதி சத்தியமாதல்பற்றி வரும் துவைத சங்கையைப் பற்பல படைப்பாய் நண்ணுகின்றதும் என்ற வாக்கியத்துள்ள எச்ச வும்மையால் அந்தக்கரண உபாதிகட்கு அதிட் டானமாகிய பிரஹ்மத்தினும் வேறாகச் சத்தை யின்மையைக் காட்டிப்போக்கித் தாங்கொண்ட அத்துவைதத்தை வலியுறுத்தினர். (அ)

(அ—கை) வானத்தால் பிரஹ்மம் சேதிக்கப் படுதல் முதலிய யாதொரு தோஷமுமில்லாத தென்றறிந்தேனெனல்.

உறைவு ருவிட மின்றென
வுறையும்வா னென்றே
குறைவு ருவகை கண்டதிற்
கூறுமொன் றுலும்
மறைவு ருதொரு குறையுமன்
றுதுமற் றெங்கு
நிறைவு ருதுவை காதென
நினைந்தனன் பிரஹ்மம்.

(போ-ரை) பிரபஞ்சத்தில் தானில்லாத விடமில்லையென்று சொல்லும்படி எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற ஆகாயமாகிய அப்பூத மொன்று மாத்திரமே பூத பௌதிகங்களென்று சொல்லப்பட்ட எந்த வஸ்துவினுலும் சேதிக்கப் படுதல் மறைக்கப்படுதல் குறைதல் நிறைதல்

ஓரிடத்திருத்தல் முதலிய யாதொரு தோஷங்களையும் அடையாதிருத்தலை யறிந்து அவ்வாகாயம் போல,

பிரஹ்மமும் தன்னிடத்தில் அத்தியஸ்தமாகிய மாயையும் அதன் காரிய (வடிவ பூத பௌதிகப் பிரபஞ்ச)முமாகிய எல்லாவற்றிலும் சத்தாஸ் பூர்த்தி வடிவ சொப்பிரகாசத்தன்மையால் விளங்குதலால் சேதிக்கப்படுதல் மறைக்கப்படுதல் குறைதல் நிறைதல் ஓரிடத்திருத்தல் முதலிய எத்தோஷங்களையும் அடையாதிருக்கிறதென்று நிச்சயித்தேன். (எ-று)

உறைவுறு விடமின்றென உறையும் வானென்றே கூறுமொன்றூலும் குறைவுறாது மறைவுறாது ஒரு குறையு மன்னு வகைகண்டதின் எனவும், பிரஹ்மம் உறையுறுவிடமின்றென (ஒளிர்தலால்) குறைவுறாது மறைவுறாது ஒரு குறையும் மன்னாது மற்றெங்கு நிறைவுறாது வைகாதென நினைந்தனன் எனவும் உவமை வினையைப் பொரு

ளினும் பொருள்வினையை உவமையினும் கூட்டி யும் அந்நுவயித்தும் வருவித்தும் முடித்துக் கொள்க. (கூ)

(அ—கை) தபனனல்—ஒரே பிரஹ்மம் மாயையால் நாநாஜீவராக விளங்குகின்ற தென்ற றிந்தே னெனல்.

(சா) அருவ மாமறி வானவ
ஞக்கைகள் பலவு
மொருவ ஞகியே யுறைகுவ
னென்பதை யுணர்ந்தேன்
பருதி வானவ ஞெருவனே
யாய்ப்பல குடத்தின்
மருவு நீர்தொறு நிழல்பல
வாயுறன் மதித்தே.

(பொ-ரை.) அறிவே சொரூபமாயுள்ள பிரஹ்மாபின்ன ஆன்மதேவனனவன் அகண்டைகரச சொரூபியேயாயினும் மாயையினல் சரமுமசரமு மாகிய பலவித சரீரங்களிலும் பிரதிவிம்ப ரூபத்

தால் பலவகைப்பட்ட ஜீவர்களாகப் பொருந்தி நிற்கின்ருன் என்பதை யான் அறிந்தேன். எதனுலெனில், சூரியனெருவனுகவேயிருந்தும் ஜல நிறைந்த பலகுடங்களிலு மொவ்வொன்ருகப்பல பிரதிவிம்ப சூரியர் காணப்படுதலால். (எ-று) (௧0)

(அ—கை) திங்களால்—சட்பாவ விகாரங்கள் உடலின் றருமமன்றி யெனக்கில்லை யென்றறிந்தே னெனல்.

(எ) திங்க ளுடொறும் வளர்தலுந்
தேய்தலுந் தெரிக்கி
னங்கண் மாநிலம் விளக்குவெண்
கதிர்க்குண மதனுற்
றங்கு மோராறு வகைவிகா
ரங்களுந் தமியே
னிங்கு நாடின னுடற்கலா
லுயிர்க்கிலை யெனவே.

(பொ-ரை) சந்திரனிடத்துக் காணப்படு கின்ற பிரகாசம் ஒவ்வொரு நாளிலும் வளர்தலும் குறைதலும் யாதுகாரணத்தாலென வாராயின் அவ்வளர்ச்சியுங் குறைவும் ஜகத்தைப் பிரகாசிப் பிக்கின்ற வெள்ளிய சந்திரிகையின் குணமென்ற றியப்படுதல்போல ஏகனாகிய வென்னிடத்துக் காணப்படுகின்ற பிறத்தல் முதலாகச் சொல்லப் படுகின்ற ஆறுவகை விகாரங்களும் மாயாகாரிய மாகிய உடலின் றருமமேயன்றி யெனது சொரு பத்திற் கில்லையென்று இவ்விடத்து நிச்சயித் தேன். (எ-று) (கக)

(அ—கை) திங்களால்—ஆன்மாவினிடத்துச் சீவத்தன்மையில்லை அது மாயையின் காரிய மென்றறிந்தே னென்ல்.

விளங்கு மெய்ப்பொரு ளாக்கைமே
 வினுமதன் குணங்க
ளுளங்கொ டெண்ணிலப் பொருட்கிலை
 யென்பது மோர்ந்தேன்

களங்க மென்பது மதிக்கிலைக்
　　கருதுமக் களங்கம்
வளங்கொள் பூமியின் சாயை யென்
　　பாரதை மதித்தே.

(பொ-ரை) பிரகாசிக்கின்ற சந்திரனிடத்துக் கருமை காணப்படுகின்றது அவ்வாறு காணப்படினும் அக்கருமையை யறிந்தோர் பூமியின் சாயையென்று கூறுதலினல் சந்திரனிடத்து இயல்பாகக் கருமையில்லையென்று நிச்சயித்து அதுபோலச் சொப்பிரகாசவடிவ பிரஹ்மாத்மாவினிடத்து மூவகைச் சரீரத்தோடு கூடிய ஜீவதன்மம் காணப்படுகின்றது அவ்வாறு காணப்படினும் புத்தியால் விசாரிக்குமிடத்து அது மித்தையாகிய மாயையின் காரியமெனக் காணப்படுதலால் அச்சீவத்தன்மை ஆத்துமாவினிடத்து வாஸ்தவமாக இல்லையென்றறிந்தேன். (எ-று) (கஉ)

(அ—கை) வாரியால்—மகிழ்வு வாட்டம் அன்னியாபேக்ஷக ளின்மைகளும் கம்பீர முடைமையும் பெற்றேனெனல்.

(அ) நிறைவி ேனொடொரு குறைவற
வமைந்தய னீர்வந்
தறையு நீடிரைக் கூடினு
மதன்குண மடையா
துறையும் வாரிகம் பீரமுற்
றென்பதை யுணர்ந்திங்
கிறைவ யானுமக் குணங்களை
யுவந்தியைந் தனனால்.

(பொ-ரை) கடலானது ஆற்றுநீர் முதலியன வந்து தன்னைச் சாரினும் சார்ந்த அந்நீரின் றன்மையைத் தானடையாமலும் அவ்வயல் நீர்ச் சேர்க்கையால் முன்னிலு மதிகப்படுதலாகிய வொருவிகாரமாவது சூரியன் முதலியவற்றால் தன்னிடத்துள்ள நீர் கிரகிக்கப்படினும் அதனாற் குறைதலாகிய வொரு விகாரமாவது அடையாமலும் அதனால் அன்னியாபேக்ஷ யின்றியதாயும்

பிறரால் அளத்தற்கரிய தன்மையுடையதாயும் இருக்குந்தன்மையை யறிந்து அரசனே இவ்விடத்து அவ்வுயர்வாகிய குணங்களை அக்கடவிடமிருந்து யானும் விரும்பிப்பெற்றனன். (எ-று)

எவ்வாறெனில்—சத்தாதிவிடயங்கள் என்னிடத்துப் பிராரத்தவசத்தால் வந்துசாரினும் சார்ந்த அவ்விடய மயமாகாதவனாகவும் அவ்வயல் விடய சம்பந்தத்தால் நிறை (மகிழ்) தலாகிய வொரு விகாரமாவது அவ்விடய சம்பந்த நிவிர்த்தியாற் குறை (வாடு) தலாகிய வொரு விகாரமாவது அடையாதவனாகவும் அதனால் அன்னியாபேக்ஷை யில்லாதவனாகவும் அன்னியர்கள் தங்கள் மனத்தா லளத்தற்கரிய சொரூப நிலையை யுடையவனாகவும் ஆயினேன். (எ-ம்)

இதற்குதாரணம்.—பகவற்கீதை.

நீரினு னிறைந்து நின்ற கடலிலே
நெறிமேற் கொண்டு
நீரினு னிறைந்த வாறு வீழ்ந்ததா
னிறைவு றுது

தேரிணு யதுபோ லாசை செறிந்தவர்
திறமே நோக்கிச்
சாருமா லாகி லத்தா லவர்களுஞ்
சலித்தல் செய்யார். (கரு)

(அ—கை) மலைப்பாம்பால்—பிராரத்தத் தாற்கிடைத்த வுணவைப் புசிப்பேனெனல்.

(கசு) உற்ற வுற்றவை முயற்சியின்
வருந்திடா துண்ணுங்
குற்ற மற்றநீண் மலையரா
வென்பதைக் குறித்திங்
கற்ற மற்றநல் லறிவினர்க்
கிதுவழக் கென்னப்
பெற்ற பெற்றன முயற்சியற்
றிருந்தனன் பெரியோய்.



(பொ-ரை) மாட்சிமையுடைய அரசனே உணவுக்காக முயற்சிசெய்து வருந்தாமல் தன்னிடத்துத் தெய்வச் செயலால் வந்துசேர்ந்த

சேர்ந்த வஸ்துக்களை மாத்திரம் புசிக்கின்ற மலைப் பாம்பினது துன்பமற்ற செயலையறிந்து இதுவே விவேகிகளினது வொழுக்கமென்று நிச்சயித்து யானும் அவ்வாறே உணவின்பொருட்டு முயற்சித்து வருந்தாமல் பிராரத்தத்தின்படி கிடைத்த கிடைத்த வுணவுகளை மாத்திரம் உண்டு சுகித்து இருக்கின்றேன். (எ-று)

உற்ற வுற்றவை பெற்ற பெற்றன என்னும் அடுக்குகள் குணதோஷக்கிரகண மின்மையை உணர்த்தி நின்றன. உண்டு—என்பது சொல்லெச்சம். (கச)

வேறு.

(அ—கை) மானல்— வெவ்விசை கேளெனல்.

(௫௦) மடந்தையர் மொழியுங் கானமுங் கேட்டு
மன்னவன் மகண்முலை மணந்தான்
கடந்திரி கலையின் கோடுபெற் றுயர்ந்த
கருதருந் தவனெனல் கேட்டும்

படர்ந்திள மறிமான் வேட்டுவன் கானம்
பகர்செவி மடுத்தவன் வலைமேற்
கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன்
கேட்பது நாமகீர்த் தனமே.

(பொ-ரை) மயக்கு வேடதாரிகளாகிய பெண்கள் வசனங்களையும் கீதங்களையும் சுக சாதனமென நம்பிக்கேட்ட அக்காரணத்தால் கலைக்கோட்டு முனிவனென்னும் பெரியோன் ஓரரசன் மகளை விவாகஞ்செய்து துன்பமுற்றா னென்னும் வார்த்தையைக் கேட்டலினாலும் வேடனாவன் தன்னாற் கட்டப்பட்டிருக்கும் வலையின் மத்தியில் மான்றோலினுள் மறைந்து நின்று மானினது குரல்போற்செய்த அனுகரண வொலியைக் கேட்டுவந்து அவ்வலையின் கண்ணக கப்பட்டு வருந்திக்கிடந்த மானைப் பார்த்தலினா லும் துக்ககாரணமாகிய இசைகளைக் கேளேன். ஆனால் என்னாற் கேட்கப் படுவது கடவுள் நாமகீர்த்தனமேயாம். எ-று. (கரு)

(அ—கை) கரியால்—பெண்போகம் விடுத்தேனெனல்.

(கக) துதிதரு வயவர் படுகுழிச் செலுத்துந்
துகளுறு பிடியையுள் ளுவந்து
மதகரி தழுவி வயவர்கை வசமாய்
வயங்குதல் கண்டுமட் டொழுகுந்
ததைமலர்க் குழலார் தனகிரி தழுவிற்
றணப்பரி தாய்மதன் வசமாய்
விதலையின் மனமாய் மயக்குறு மென்ன
விடுத்தனன் புணர்ச்சிமற் றன்றே.

(பொ-ரை) படுகுழியின் மத்தியிற் பாகர்களால் நடத்திக்கொண்டு சென்று கட்டப்பட்டிருக்கிற பெட்டை யானையைக்கண்டு விரும்பி மதத்தையுடைய ஆண்யானை தழுவச்சென்று அப்பாகர் கையிலகப்பட்டு வருந்துதலைப்பார்த்து மங்கையர் கொங்கைகளை ஆலிங்கனஞ்செய்ய நினைக்கினும் அந்நினைப்பால் மனமானது நீக்குதற்கரிய ஆசை வசமாய் சாஞ்சல்யமுற்று மயங்கு

மென்றறிந்து அம்மங்கையர் கலவியை யொழித்தேன். (எ-று) விதலைச்செய்வேனை விடுதி கண்டாய் என்றார் பிறரும். (கசு)

(அ—கை) பதங்கத்தால்—பெண்களுருவத்தைப் பாரேனெனல்.

(கஉ) ஒளிகொளும் விளக்கி னழலுருக் கண்டிடு
துணவுகொ லெனவதிற் சுழன்று
விளிவுறும் பசிய பதங்கமுன் கண்டு
வெய்யதீத் தொழிலெனக் கருதித்
தெளிவுசொண் முனிவ ராயினுங் காணிற்
சிந்தைகொண் டனுதினம் வருந்திக்
களிகொளுங் கருங்கண் மடந்தைய ருருவங்
கருத்தொடுங் காண்கில னம்மா.

(போ-ரை) விளக்கினது பிரகாசமாகிய உருவத்தைப்பார்த்து அதனைத்தா முண்ணுதற்குரிய உணவென்று நினைத்துப் பலதரம் அதின் மீது விழுந்து விழுந்து இறக்கின்ற விட்டிற் பறவைகளை நேரிற்பார்த்துத் தீங்கினைத்தரும்

உருவங்களைப் பார்க்குமித்தொழில் மிகக்கொடிய தென்று நிச்சயித்து மயக்கமறத்துறந்த முனிவ ராயினும் பார்ப்பாராயின் அவரையும் ஆசை கொண்டு சுதரவருந்தி மயங்கச்செய்யும் கரிய கண்களையுடைய பெண்களுருவங்களை யிச்சித் தும் பாரேன் இச்சியாமலும் யான்பாரேன். (என்று) கணிகொளும் என்பது பிறவினைப் பொருளில்வந்தது. (கஎ)

(அ—கை) மீனல்—சுவையை யொழித்தே னெனல்.

(கஅ) வஞ்சநெஞ் சினராற் றாண்டிலின் வளைந்த
வன்சுவை யூண்பெற வடைந்து
துஞ்சுத லடைந்த மீன்குழுக் கண்டு
துன்னுமை வகையெனும் வாயுப்
பஞ்சர மென்றுற் றுடலுறை வதற்காய்ப்
பசிக்கன றணிப்பதற் கன்றி
யஞ்சுவை யிவையென் றுசையி னலம்வந்
தருந்துத லொழிந்தன னடிசில்.

(பொ-ரை) கபட எண்ணமுடைய மீன் கொலைஞர்களால் தூண்டிலினது முனையிற் கோத்துவைக்கப்பட்ட வுணவினை யுண்ணுதற் பொருட்டுச் சென்று வாயினுட்பற்றி அம்முனையாற் குத்தப்பட்டு இறந்தமீன் கட்டைகளெனக் கண்டு பஞ்சவாயுக்களென்று சொல்லப்பட்ட பக்ஷிகள் நெருங்கிவசிக்கின்ற சரீரமாகிய கூட்டிலுற்ற பசியாகிய அக்கினியைத் தணித்தற்பொருட்டு வுணவுகளை யுண்ணுவதன்றிச் சுவையின் விருப் பங் கொண்டுண்ணேன். (எ-று)



இஃதேகதேச வுருவகம். (கஅ)

(அ—கை) வண்டால்—பிக்ஷையும் மனைதோறும் சிறிது சிறிதேவாங்கிப் புசிக்கிறேனெனல்.

(கசு) வண்டினஞ் சிறிது சிறிதென வலரு
மலர்தொறும் வருமுரு குவப்பா
லுண்டன திரிதல் கண்டன னியானு
முரைக்கினித் தொழிலழ கென்ன

வெண்டரு நகரின் மனைதொறுங் குறுகி
யெனதொரு கரமிசை யையங்
கொண்டனன் சிறிது சிறிதெனக் கொள்ளக்
கொள்கலத் தேற்றிடா தன்றே.

(பொ-ரை) வண்டுகளானவை அன்றலரும் பூக்கள்தோறுஞ்சென்று அவற்றில் ஊறிநிறைந்துள்ள தேனினின்றும் சிறிது சிறிதுண்டு மகிழ்ச்சிகொண்டு திரிதலைக்கண்டு பிறருக்கு வருத்தத்தைக் கொடாத வித்தொழிலே சிறந்ததென நிச்சயித்து நகரங்களிலுள்ள செல்வத்தால் மதிப்புடைய வீடுகள்தோறும் சென்று பிக்ஷையை மிகுதியாகப் பாத்திரத்திற்கொள்ளாமல் சிறிது சிறிது கொள்ளுமாறு எனது ஒரு கையால் வாங்கி யுண்டு மகிழ்ந்திருக்கின்றேன். (எ-று) உண்டன, கண்டனன், கொண்டனன் என்னும் வினைமுற்றுக்கள் வினை யெச்சமாயின. உண்டென்பது சொல்லெச்சம். (கக)

(அ—கை) அப்படியானால் நீர் ஒரு வீட்டிற் புசிக்கிறதில்லையா? புசித்தால் தோஷமென்னை யென்னும் வினாவிற்குத்தரங் கூறுகின்றார்.

ஒருமறை மலரே யுவந்துமென் முருகுண்
டுறைதரு மொருசுரும் பிரவில்
விரியிதழ் குவிய மலரகப் பட்டு
விளிந்தது கண்டொரு நாளுங்
கருதிய நகரி லொருமனை யுறைந்து
கவின்பெறு முணவுவந் தருந்தேன்
மருவலர் மகுட கோடிக ளிடறு
மலர்புரை தருபத யுகத்தோய்.

(பொ-ரை) எது மகாராஜனே ஒரு தாமரைப்பூவின்கண் ணிறைந்த வாசனைபொருந்திய தேனையே பகலெல்லாமருந்தி மகிழ்ந்திருந்த வண்டானது இரவில் அம்மலரினிதழ்கள் குவிந்து (மூடி) கொள்ளுதலால் அதனுள்ளகப்பட்டு இறந்ததைப்பார்த்து யான் எந்த நகரத்தைக் குறித்துச்சென்றாலும் அறுசுவை யுருசியுள்ள வுணவாயிருப்பினும் ஒருமனைக் கண்ணிருந்து அருந்தேன். (எ-று) (உ௰)

## வேறு.

(அ—கை) 15-முதல் 20-வது கவிபரியந் தம் சத்த முதலிய வொவ்வொரு விஷய விச்சை யுடையார்க்கு வருந் துன்பங்களைத் திருஷ்டாந்த வாயிலாகக்காட்டி யிக்கவியால் அவ்வைந்து விஷய விச்சையு மொருங்குடையார்க்கு வருந் துன்பத்தைப்பற்றிக் கூறுகின்றார்.

முந்த வேயொலி யாதியி
லொருகுண முன்னிப்
பந்த மோடிட றுற்றிறந்
தனபல வென்று
ளைந்து சேர்குணங் களுமொருங்
காசையி னடைந்தோ
ருய்ந்து போநெறி யுண்டுகொ
லோமதித் துரைக்கின்.

(போ-ரை) சத்த முதலிய குணங்களுளொவ் வொன்றைச் சுகசாதனமென நினைத்து நினைத்து அவற்றைப்புசிக்க முயற்சித்து அம்முயற்சியால்

பந்தத்தையும் அதனாற் பிறப்பிறப்பாதி துன்பங் களையும் அடைந்து அநேக ஜீவர்களிறந்தன வென்று சொல்லும்பக்ஷத்தில் அவ்வுதாரணங் களைக்கொண்டாராய்ந்து பார்க்குமிடத்து அவ் வைந்து குணங்களையு மொருங்கே இச்சிக்கின் றவர் துன்பங்களினின்று விலகிச்சுகமடையு மார்க்கத்தைக் காணவுங்கூடுமோ கூடாது. எ—று. (உக)

(அ—கை) களைசெய்கின்றோனல்—எனது நிஜசொரூபத்தை நிச்சல அந்தக்கரணத்தாலறிந் தேனெனல்.

(கரு) பம்பி ரும்பொறி வழிமனம்
பாந்துரு தடக்கி
யம்பு செய்தகன் கோணறத்
திருத்தின னவன்போல்
வெம்பு மைம்புலன் வழிமனம்
விரும்புதல் வெறுத்துக்
கம்ப மில்லறி வாம்பொரு
ளறிந்தனன் கருத்தால்.

(போ-ரை) அம்புசெய்கின்ற வொருவன் அதனைச்செய்து அக்கணையின் கண்ணுள்ள கோணலைத்திருத்தும்பொழுது மனத்தை மற்றய விந்திரியங்களின் வழியாக அவ்வவற்றிற்குரிய விஷயங்களைநோக்கி வெளியிற்செல்ல வொட்டாதடக்கி நேத்திரேந்திரிய மொன்றன் வழியிலேயே செலுத்தி அதனாலேகாக்கிர சித்த முடையனாயிருந்து நேராகும்படி திருத்தினான் அதனைக்கண்டு யானும் அவ்வாறே நிச்சலமாயுள்ள எனது ஞானசொரூபத்தை யறியுங்கால் சத்தமுதலிய விடயங்களைநோக்கி ஞானேந்திரிய மைந்தின்வழியினாலும் செல்லவொட்டா தடக்கப்பட்டு அசைவறநின்ற அந்தக்கரணத்தாலறிந்தேன் அரசனே. எ—று. (உஉ)

(அ—கை) குமரியால்—அயலாரிடம் பேச்சொழிந்தேனென்னல்.

(கசு) தாயுந் தந்தையும் வேறொரு
நகர்வயிற் சார்நா
ேணைய மானதன் மணத்திற
னேர்தர நிகழ்த்த

மேய சீருற வோர்க்குண
வருத்துதல் வேண்டித்
தூய தாமெழிற் குமரிநெற்
குத்துத றுணிந்தாள்.

பெரிய கைவளை யார்ப்பவர்
கேட்கினிப் பேதை
யுரைசெய் நல்குற வுற்றவ
ளென்பரென் றுணர்ந்தாங்
கரிய கைவளை கழற்றின
ளொன்றுவைத் ததனற்
கருது வெவ்வுரை வருங்கொலென்
றற்றுரை கடிந்தேன்.

(பொ-ரை) ஒரு கன்னிப் பெண்ணானவள் தனது பிதாமாதாக்கள் அன்னிய நகரத்திற்குப் போயிருந்த அந்நாளில் தன்னை யோர் மணாள னுக்கு மணஞ் செய்யவேண்டிச் சம்மதி கேட்க வந்த சிறந்த உறவினருக்கு உணவிற்காக அரிசி

வேண்டி நெற்குத்த வாரம்பித்தாள். அந்நெற்குத்துங்கால் தனது கைகளி லணிந்திருக்கின்ற வளையல்களினோசையை யுறவினர் கேட்பாராயின் தன்னை வறுமை யடைந்த பெண்ணென்று மதிப்பாரெனக் கருதி அவ்வாறு மதியா வண்ணம் தனது கைகளிலுள்ள வொவ்வொரு வளையலை மாத்திரம் வைத்து மற்றெல்லா வற்றையுங் கழற்றினாள் அதனையறிந்த யானும் அன்னியரிடத்துப் பேசினாற் கடுஞ் சொற்களும் வரக்கூடுமென நினைந்து அன்னியரிடம் பேசுதலை யொழித்தேன். எ—று (உரு) (உச)

(அ—கை) தேனீயால்—துறவிகள் நாளைக் கென் றொன்றையும் வைத்திருக்க லாகாதென் றறிந்தேனெனல்.

(கஎ) துன்றி வைத்ததண் டேனுணு
கிழந்துசூழ்ந் தெடுக்க
வொன்று மற்றவ ராலுயி
ருலர்ந்தமை யுணர்ந்து

நன்ற றிந்துபற் றெறிந்தவர்க்
கொன்றையு நானேக்
கென்று வைப்பது தீதெனத்
தெளிந்தன னிறையோய்.

(பொ-ரை) தேனீக்களானவை தமது கூட்டின் கண்ணிறைத்துவைத்த தேனை யுண்ணாது வைத்துக்காத்து அதனை யன்னியர் அறிந்தெடுத்துச்செல்ல அதுகாரணமாக அவ்வீக்கள் அத்தேனையிழந்து தமக்கொன்றுமில்லாமல் மெலிந்து வருந்துதலை யறிந்து அரசனே அற்பபதார்த்தம் அல்லது மஹத்தாகிய பதார்த்தமென்பவற்றுள் யாதொன்று கிட்டினும் அதனை நாளை யுபயோகிப்போமென நினைத்துவைத்துப் பாதுகாத்தல் எல்லாப் பற்றுக்களையும் துறந்த விவேகிகளுக்கு அறமல்லவென்று நிச்சயித்தேன். (எ-று) (உரு)

(அ—கை) புருவால்—சுற்றத்தார் பற்றொழிந்தே னெனல்.

(கஅ) நீணி றக்கொடு வேட்டுவன்
படுத்தநீள் வலைவாய்த்
தூநி றப்பெடை பார்ப்பினந்
துயர்தல்கண் டழுங்கித்
தானு முற்றதி லொருபுற
விறந்தது தன்னு
ளூன முற்றிடு மெனத்தமர்
கேண்மையிங் கொழிந்தேன்.

(பொ-ரை) புட்களைப்பிடித்தற்கு வேடனாற் கட்டிவைக்கப்பட்டிருக்கிற வலையின்கண்ணே பெட்டைப்புறாவுங் குஞ்சுகளும் அகப்பட்டுத் துன்புறுதலைப் பார்த்தவுடனே ஆண்புறாவானது தானும் உயிரோடிருக்க மனஞ்சகியாது அவ்வலைக்கண் விழுந்து இறந்தது அதனைக்கண்டு யானும் சுற்றத்தாரிடத்துவைத்த சினேகத்தைத் துன்பகாரணமென்றறிந்து விடுத்தேன். (எ-று) (உகூ)

வேறு.

(அ—கை) தாசியால்—பொருள் முதலிய எல்லாவாசையு மொழித்தேனெனல்.

(கக) சோதி மாடந் துலங்கு மிதுலைவாழ்
பேதை யாமொரு பிங்கலை யென்பவ
ளோது மாசை யொழிப்பது நன்றெனக்
கோதி லாக்குரு வானது கூறுவாம்.

(பொ-ரை) பிரகாசிக்கின்ற மாளிகைகள் வரிசையாக விளங்குகின்ற மிதுலாபுரியென்னும் நகரத்தின்கண் வசிக்கின்ற பிங்கலை யென்னும் பெயருடைய பெண்ணானவள் துக்கசாதனமாகச் சொல்லப்படுகிற விஷயத்தின்கண்ணுண்டாகு மிச்சையைச் சேஷமறக்கெடுத்தலே சுகசாதனமென்று கூறிய ஏதுவால் குருவாகிய தன்மையை யினிக்கூறுவாம். (எ-று) (உஎ)

பேசு கின்றவப் பிங்கலை யென்பவ
டாசி யாணலன் விற்குந் தகைமையா

ளாசை யாம்பொரு ணல்குநல் லாடவர்
பூசு சாந்தப் புபம்புணர் வாளரோ.

(போ-ரை) மேற்கூறிய பிங்கலை யென்னும் பெயருடையாள் தாசிகள் குலத்திற் பிறந்தவள் ஆதலால் தனக்கு விருப்பமாயுள்ள பொருள் கொடுக்கும் புருஷர்களுக்கு அவரால் விரும்பப் பட்ட சுகத்தைக் கொடுப்பவளாயிருந்தனள். (உஅ)
எ—று.

இன்ன வண்ண மிரும்பொரு ளீட்டுநாட்
சொன்ன வண்ணம் பொருள்பெறத் தோய்பவர்
மன்னும் வண்ணமோ ரல்லில் வாராமையா
லன்ன வண்ண நடைய ளயர்ந்தனள்.

(போ-ரை) மேற்கூறிய விதமாகப் பொருள் சம்பாதிக்குங்காலத்தில் ஒரு நாளிரவில் தான்சொல்லிய அளவு பொருள் கொடுத்துத் தன்னைக்கூடுதற்கு ஒரு புருஷ ரும் வாராமையால் அன்னம்போலழகிய நடையினையுடைய பிங்கலையானவள் தளர்ந்தனள். (உக)
எ—று.

மறுகி னூடு வருபவர் யாரையும்
பெறுக நீபொரு ளென்று றும் பெட்பொடுங்
குறுகி யீந்துடன் கூடுவ ரோவெனச்
சிறுகு நுண்ணிடை பார்த்துளந் தேம்புமே.

(பொ-ரை) மேலும் அந்தச் சிறிய இடையினையுடையளாகிய பிங்கலையானவள் தெருவாயிலின் கண்ணின்று அத்தெருவிற்செல்லு மொவ்வொருவரையும் இவர் இங்குவந்து வேண்டிய பொருளைக்கொடுத்து என்னைச் சேர்வாரோ இவர் என்னைச் சேர்வாரோ எனப்பொருளாசைகொண்டு பார்த்துப் பார்த்து ஒருவரும் வராமையைக்கண்டு மனம் வாடுவாள். எ—று. (௩0)

நேச மாய்நெடு மாட நிரைபுகு
மாசை யாம்வளி யாங்குநின் றுந்தலால்
வாச வார்குழன் மீள மறுகுறு
மூச லாடு பவரையு மொக்குமே.

(பொ-ரை) தெருவாயிலின்கணணின்ற வள் நித்திரையைவிரும்பி வரிசையாயுயர்ந்த தனது மாளிகையினுட்புகுவாள் அங்குத்தங்க வொட்டாமல் பொன்னுசையாகிய காற்று வெளியிலே தள்ளுதலால் உலர்ந்த சருகுபோல்பவளாகிய அப்பிங்கலையானவள் யாரேனும் வருவாரெனக்கருதி மீளவும் தெருவாயிலுக்குச் செல்லுவாள் இந்தப்பிரகாரம் வீட்டினுள்ளிலும் வெளியிலும் பலதரஞ்செல்லுதலால் ஊசலாடுகின்றவர்களையும் போல்வாள். எ—று. (௩௬)

வாயி னின்று மயங்கு நடுவிர
வாய தென்றயர் வெய்தி யகம்புகு
நேய நன்பொரு ளெஞ்சி னினைந்தழும்
பாயன் மீது படுக்கும் பதைக்குமே.

(பொ-ரை) மேற்கூறியவாறு மனையினகத்தும் புறத்தும் பலதரஞ்சென்று சலித்து அவ் வாயிலின்கண் ணெடும்போது நின்று மயங்குவாள் விருப்பமுள்ள நல்லபொரு ளின்று

கிடைக்கவில்லையே என்று நினைத்தழுவாள் பாதியிரவாயிற்றே யென்றெண்ணி யறிவிழந்தவளாய் மனையினுட்புகுந்து பஞ்சணையிற்படுப்பாள் பதறுவாள். எ—று. (௩௨)

இன்ன தன்மையங் கெய்திய வேந்திழை
பொன்னி னுற்றவிவ் வாசைபொல் லாதவெ
துன்னி யுன்னி யொழிந்த மனத்தொடு[ன்
மன்னர் மன்ன மகிழ்திவை சொல்லுமால்.

(பொ-ரை) ஓ அரசர்க்கரசனே இத்தன்மையவாகிய துன்பங்களையடைந்த அப்பிங்கலையென்னுந் தாசியானவள் இப்பொருளினிடத்துண்டாகிய வாசை மிகக்கொடியதென்பதை அதன்றோஷங்களைக் காணுதலாகிய சிந்தனத்தாலறிந்து அச்சிந்தனை பலத்தாலும் முற்காலத்துச்செய்த நிஷ்காம புண்ணிய புஞ்ச பரிபாகத்தாலும் மெய்யறிவுதயமாக அவ்வறிவாலாசையொழிய அதனொழிவால் நிராசை மனத்தினளாய் மகிழ்ச்சியடைந்து இனிக்கூறப்படும் விதமாகக் கூறுகின்றாள். எ—று. (௩௩)

துயர மோதொலே யாதுசெய் யாசையுஞ்
செயிரி ஞெங்கியுஞ் சென்றடங் காவென
வயிர மாகிய வாள்கொடு வெட்டிடா
துயரி ஞோர்க்கெங் குவகையுண் டாகுமே.

(போ-ரை) மேலுந்துன்பத்தையே நீங்காது கொடுக்கின்ற அவ்வாசையானது குற்றத்தோடு பொருந்தி வளர்ந்து வருதலன்றித் தளர்ந்தடங் காவென அதன் சுபாவத்தையறிந்து அவ்வாசையை வைராக்கியமாகிய வாளாயுதத்தாற்று ணித்து நாசம்பண்ணின தீரற்குமாத்திரம் மகிழ்ச்சியுண்டாகும் அங்ஙனம் கெடுக்காது வளரச் செய்கின்ற இச்சுபாவமுடையார்க்கு எவ்விடத்து மகிழ்ச்சியுண்டாகும் ஒரிடத்தும் மகிழ்ச்சியுண்டாகாது. எ—று.

உயர் என்பது—பிறவிவினைப் பொருடந்து நின்றது. (ருச)

உன்னிற் போத வுருவத் தலைவனுண்
மன்னிப் போகம் வழங்கி வதியவு

மின்னைப் போல்விளி நாதனை வீதிநேர்ந்
தென்னைப் போலயர் வாரெவ ருண்டரோ.

(போ-ரை) எனது செய்கையைக் குறித்தா ராயுமிடத்து ஞானசொரூபியாகிய தலைவன் என துள்ளே பேரின்பத்தைக் கொடுத்துக்கொண்டு நித்தியனாயிருக்கவும் அவ்வின்பத்தையனுபவித் துத் திருத்தியடையாமல் கணகாலத்திற்றோ ன்றியழியு மின்னைப்போலத்தோன்றி அற்ப காலத்தழியுஞ் சரீரியாகிய தலைவனை வீதியினி டத்துப் பார்த்துப் பார்த்து வருந்துமறிவிலிகள் உலகத்திலொருவருமிரார் யானே யறிவிலி. எ—று. (௩௫)

சலத்தை யுந்தசை யென்பொடு சாற்றும்
மலத்தை யும்மயிர்த் தோலின் மறைத்ததை
நலத்த தென்று நயந்து நலிந்தவென்
புலத்தை யென்சொல் புகலப் பெறுவதே.

(போ-ரை) அருவருக்கத்தக்க துர்நாற்ற முடைய மலமூத்திர வீரியங்களையும் செந்நீர் மாமிசம் எலும்பு முதலியவற்றையும் மயிரோடு கூடிய தோலால் மறைத்துச்செய்யப்பட்ட வியந் திரவடிவத்தை யெனக்கின்பந்தரத்தகுந்த தலை வனென்று நிச்சயித்து விரும்பி வருந்துதற்கு ஏதுவாயிருந்த என்புத்தி யென்னென்று சொல லப் பெறுமெனின் மயக்கமுடையதென்றே சொல்லப்பெறும். எ—று.

அத்தும், ஐயும், கொல்லும், சாரியைகள். (௭௬)

என்று கூறிய வேந்திழை யீறிலா
தொன்று மாசை பொழித்துவப் பெய்திடு
என்றி யானவ் வகையறிந் தாசையை
வென்றி வீர விடுத்தனன் வேரொடும்.

(போ-ரை) வெற்றிக்குரிய வீரனே அப்பிங் கலையானவள் தன்னையறிவிலியென்றும் தனது புத்தியை மயக்கமுடையதென்றுங்கூறி அப் பால் திருப்திபெறவொட்டாது தன்னிடத்துப்

பொருந்தியுள்ள வாசையைத் தான்பெற்ற மெய்யறிவாற்கெடுத்துத் திருப்தியடைந்தாள் அங்ஙானில் அவற்றையறிந்து யானும் அவ்வாறே மெய்யறிவைப்பெற்று அவ்வறிவால் எல்லாவாசைகளையும் வேரோடு கெடும்படி விடுத்தேன். எ-று. (கள)

(அ-கை) அன்றிலால்—யாதேனுமோர் பொருள் கைவசம் வைத்திலேனெனல்.

(உ0) அன்றி லூன்கவர்ந் தந்தரத் தேகுழித்
துன்றி யோர்புட் டொடர்ந்து பறித்தலு
மொன்றவ் வூனை யொழித்துவப் புற்றதா
லென்று மோர்பொரு ளுற்றிட ருற்றிலன்.

(பொ-ரை) ஓரன்றிற் பறவையானது தான் றின்னுதற்குரிய மாமிசத்தைப்பற்றி யெடுத்து ஆகாயத்திற்செல்லுங்கால் அதைக்கண்ட மற்றோர் வலிமிகுந்த பறவை தொடர்ந்து அடித்துப்பறித்துக்கொள்ளவும் தன்னிடத்துப்பொருந்திய மாமிசத்தைவிட்டு அதன் விடுபாட்டால்

அவ்வன்றில் துன்பமின்றி மகிழ்ந்திருந்தது யானு மதையறிந்து எக்காலத்திலாயினும் எனக்கென வொரு பொருளையும் வைத்திலேன் அதுபற்றித் துன்பமடைந்தவனு மல்லேன். எ—று. (௩அ)

(அ—கை) நாகத்தால்—உறையுள் எனக்கென வைத்திலேன் எனல்.

(உக) சுற்றின் மேவிய சொல்கறை யான்புரி
புற்றின் மேவும் புயங்கமென் றோர்ந்தபின்
னுற்றி யானுஞற் றேனென் றமர்தொறு
மற்று ளோர்செய் மதிற்குகை வைகுவேன்

(பொ-ரை) கறையான்றமக்கு வசிக்குமிடமாக நாற்புறத்தும் மண்ணினாற் செய்யப்பட்ட புற்றினிடத்துக் கட்செவி வசிப்பதல்லது தனக்கென வோரிடஞ்செய்துகொள்ளுவதில்லையென்று தெரிந்துகொண்டபின்பு அவ்வாறேயானும் அன்னியாற்கட் பொருந்தி வசிக்குந்தோறும் அன்னியராற்கட் டப்பட்ட பொதுச்சாவடி முதலிய விடங்களே

சமாதி யறையாகக் கொண்டு வசிப்பதல்லது எனக்கென ஓரிடஞ் செய்துகொள்ளேன். எ—று. (௩௧)

(அ—கை) சிலம்பியால்—யான் உலகத்தை யாக்கியளித்தழிக்கின்ற காரணவஸ்துவென்று என்னையறிந்தேனெனல்.

(௨௨) நுண்ணி தான சிலம்பி
யுண் டாக்குநூ
னண்ணி யேயுறைந் துண்
பதை நாடியா
னெண்ணி லாவுயிர் தந்தவை
யேய்ந்துறைந்
துண்ணு மோர்பொரு ளேயென்
றுணர்ந்தனன்.

(போ ரை) சிலம்பியென்னுமோர் செந்துவானது தனது சரீரத்தினின்றும் நுட்பமாகிய நூலை வெளிப்படுத்தி அதன்கண் வசித்து அதனை

மீளவு முட்கொள்ளு கலையறிந்து யானுந் தனது சத்தியினின்றும் அளவிறந்த நாமரூபங்களை வெளிப்படுத்தி யதன்கண் ஜீவரூபமாகவசித்து அவற்றை மீளவும் தன்னுள்ளடக்கிக் கொள்ளுகின்ற சச்சிதாநந்த பரிபூரண அத்துவைத பிரஹ்மமென்று என்னையறிந்தேன். (௨௦)

(அ—கை) பாலனல்—மானுபிமானந் துறந்தேனெனல்.

(௨௱) மான மோடவ மான மடைந்திடா
தான நீங்கி யுவந்த சிறுவனைத் [தால்
தேனு லாந்தொடை யோய்முனந் தேர்ந்த
யானு மோகையுற் றேனவை யற்றரோ.

(போ-ரை) தேன்றுளிக்கின்ற மலர்மாலை யணிந்தமார்பனே மேலும் கூறக்கேட்பாயாக பாலகனுனவன் தன் சரீரத்தைப்பற்றி யெழாநின்ற மானம் அவமான முதலியனவாகச் சொல்லப்படுகின்ற இரட்டைத் தருமங்களினபிமானமில்லாமையால் அவற்றினபிமானத்தாலுண்டா

கும் மனக்குறையாகிய துன்பத்தினின்று நீங்கி யாநந்த மூர்த்தியா யிருத்தலைக்கண்டு அக்காக்ஷியால் யானும் அவ்வாறே சரீராபிமானத்தைத் துறந்தமையால் மனக்குறையாகிய துன்பநீங்கி யின்புற்றிருக்கின்றேன். எ—று. (சக)

(அ—கை) வண்டெடுத்தகீடத்தால்—மெய்ப்பொருட்டியானத்தால் மெய்ப்பொருள் அடையப்படுமென்றறிந்தேனெனல்.

(உச) அன்பி னுயினு மாசையி னுயினும்
வன்ப யத்தின் வயிரத்தி னுயினு
நன்பெ ருந்திரு நாதனை யேநினைந்
தின்ப மவ்வுயி ரெய்துவ தென்பதை.

ஈங்க றிந்தன னியானுற் றெடுத்தொரு
பாங்கர் வைத்துப் பரிவிற் பறந்தய
நீங்கும் வண்டை நினைந்த பசும்புழு
வாங்கவ் வண்டுரு வானதுங் கண்டரோ.

(பொழிப்புரை) எந்தச்சீவன் அன்பினுலாயினும் ஆசையினுலாயினும் பயத்தினுலாயினும் பகையினுலாயினும் ஸ்ரீமந் நாராயணனுகிய பகவானை யெப்பொழுதும் தியானித்துக்கொண்டேயிருக்கின்றதோ அந்தச்சீவன் ஆநந்த சொரூபமாகிய மோக்ஷத்தை அடையுமென்பதை இவ்விடத்தறிந்தேன். (௬௨)

எக்காரணத்தாலெனில்—ஓர் புழுவைத் தனது கொடுக்குமுள்ளாற் கொட்டிப் பயப்படுத்தித் தன்னுற் கட்டப்பட்டவோர் மண்கூட்டினுள் வைத்து மூடி அயலிடத்துச்சென்ற வண்டினை யப்புழு பயத்தினுல் நினைந்துகொண்டே கூட்டினுள்ளிருந்து அவ்வண்டினுருவமடைந்தது அதனையவ்விடத்துப் பார்த்தலால். எ—று.

அன்பாலும் ஆசையாலும் பயத்தாலும் வயிரத்தாலும் சிந்தித்துச் சுகமடைந்தவர் முறையே பிரகலாதர், கோபியர், கஞ்சன், சிசுபாலன் ஆகிய இவர்கள். (௬௩)

வாக்கி னைக்கடந் தோங்கிமற் றெங்கணு
நீக்க மின்றி நிறைந்த வறிவினை
யூக்க முற்றுணர் தற்கிட மாதலி
னாக்கை யுங்குரு வான தரசனே.

(பொ-ரை) எது மகாராஜனே வாக்குமனங் களாலறிதற்கரியதாயுயர்ந்து (சூக்குமமாய்) மாயா கற்பிதமாகிய எவ்விடங்களிலும் பிரிவின்றிப் பூரணமாயுள்ள பிரஹ்ம சைதன்னியத்தை சாங் கிய அல்லது யோகமார்க்கங்களால் அப்பியசித் தறிதற் காதாரமாயிருத்தலால் இச்சரீரமு மெனக் குக்குருவாயிற்று. எ-று.

ஆக்கையும்—என்பதின் உம்மை இறந்தது தழீ இயவெச்சப்பொருளது. (சச)

மடல்வி ரிந்தம ரைமலர் வைகுவோன்
சடம னைத்தையுந் தந்துழ வந்தில
னிடா றுக்குமென் றெண்ணிநன் மானிட
வுடல்ப டைத்தபி னேகையுற் றுன்முனம்.

(போ-ரை) தாமரைமலரில் வசிக்கின்ற பிரஹ்மாவானவன் மானுடமல்லாத சரீரங்க ளெல்லாவற்றையும் சிருஷ்டித்தும் அவற்றிற் பிறவித்துன்ப மொழிக்குந்தன்மை காணப்படா மையால் மகிழ்ச்சியடையாமல் மானுடசரீரமே பிறவித்துன்பத்தைப்போக்குதற்கேதுவென நிச் சயித்து அதனைச் சிருஷ்டித்து அப்பாற் சந்தோ ஷித்தான். அக்காலத்தில். எ-று. (சரு)

மாந்த ராக்கையிம் மாநிலத் தெய்துதல்
வேந்தர் வேந்த மிகவரி தாயினுங் [ன்
காய்ந்த கண்ணமன் கைப்பட் டிறக்குமெ
ளுய்ந்து சீலத் தமர்தன ன்ருக்குமே.

(போ-ரை) அரசர்க்கரசனே இப்பூமியின் கண் மானுடசரீரத்தைப்பெறுதல் அரியவற்று ளெல்லாமரியது அவ்வாறரிதாயினும் அது சினக் குறிப்புடன்கூடிய கண்களையுடைய நமனது கையிலகப்பட்டிறக்குமென விசாரித்தறிந்து அவ் வாறவன் கைப்பட்டிறவாவண்ணம் மெய்ய றிவுபெற்று வாழ்தலே யிப்பிறப்பின்பயனும். எ-று. (சகூ)

உறக்க மும்விழிப் பும்முறுந்
தன்மைபோற்
பிறக்கு மாக்கை யிறக்குமெய்ப்
பெட்பொடு
பிறக்கு மாக்கையு மேய்ந்து
பிறத்தலிற்
றுறக்க வேண்டுமெய் யாசையைச்
சூழ்ச்சியோய்.

(பொ-ரை) நுண்ணறிவுடையோய் ஒருவன் தான் நித்திரைசெய்யுந் தன்மையும் அந்நித்திரை யினின்று விழிக்குந்தன்மையும்போல சரீரம் பிறக்குங்காற் பிறக்கிறான் இறக்குங்கா லிறக்கிறான் அவ்வாறிறந்தவன் அதன்கண் வைத்த வாசையால் மீளவுமதனோடு கூடிப்பிறக்கின்றான் இவ்வாறு மாறிமாறிப் பிறந்திறத்தற்குக்காரணம் அவ்வுடலாசையே யாதலாற் பிறவாமையை விரும்புவோன் அவ்வாசையை யொழிக்கவேண் டும். எ-று.

(சஎ)

வேறு.

இத்திற மெதுவென் பா[illegible]னம்
மொழிற்குலத் திறை[illegible]வன் கேட்ப
[illegible] மென்ன [illegible]
[illegible]வக்[illegible]ன் மிக்கான்
[illegible]த்தாத்திரேயன் முன்
[illegible]பின்னென்
[illegible]வந்துரை
[illegible]னே.

(பொ-ள்) அத்திரி மகாரிஷியின் புத்திர னென்று யாவராலும் புகழ்ப்பெற்ற சைதன்னிய சொரூபியாகிய தத்தாத்திரேயனென்னும் பெயருடைய தவசிரேஷ்டன் நமது குலத்தவனாகிய யது மகாராசனுக்குச் சொல்லினனென்று சக்கிராயுதபாணியாகிய கிருஷ்ண பகவான் உத்தவருக்கு மேற்கூறியபிரகாரம் விருப்பத்துடனருளிச்செய்தார். எ-று. (சஅ)

ஸ்ரீ தத்தாத்திரேய யது சம்வாதம்
முற்றிற்று.